original text books, of course, with the help of the existing text books in English for the purpose of use at the College level. For that we have appointed a Committee and they are going into this matter.

SRI A. VEDARATHNAM : இதுவரையில் விஞ்ஞான தொழில் நுட்ப நூல்கள் தமிழில் ஏதேனும் வந்திருக்கிறதா ? வந்திருக்கிறது என்றால் மேலும் இவ்வித நூல்கள் வெளிவருவதற்கு சர்க்கார் ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறதா ?

THE HON. SRI C, SUBRAMANIAM : பல நூல்கள் வந்திருக்கின்றன. இன்னும் பல நூல்கள் வருவதற்காகத்தான் ஒரு பரிசு திட்டம் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மூலமாக அமுல் நடத்தப்பட்டு வருகிறது. புத்தகத்தை எழுதி பிரசுரிக்க முடியாதவர்கள் கையெழுத்து பிரதியை கொடுத்தாலும் அதற்கும் பரிசு கொடுக்கும்படி திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது.

SRI M. P. SARATHI : மொழி பெயர்ப்பு விஷயமாக தமிழ் அறிஞர்களை கலந்து கொண்டுதான் இந்த முடிவுக்கு சர்க்கார் வந்ததா அல்லது சர்க்காரே இந்த முடிவுக்கு வந்ததா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுகிற அறிஞர்கள் என்பது திராவிட முன்னேற்ற கழகத்திலுள்ள அறிஞர்களை குறிப்பிடுகிறார்களா அல்லது வேறு அறிஞர்களை குறிப்பிடுகிறார்களா என்று தெரியவில்லை. (சிரிப்பு.) யார் அறிஞர்கள் யார் அறிஞர்கள் இல்லை என்று இதில் சொல்ல முடியாது. பலரை கலந்து ஆலோசித்த பிறகுதான் இந்த முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

SRI S. LAZAR : ஸார், ஏற்கனவே ஸைன்டிபிக், டெக்னிக்கல் விஷயங்களில் தமிழில் சில நூல்கள் இருக்கிற என்பது உண்மை. ஆனால் ஸைன்டிபிக் வார்த்தைகளையும் டெக்னிக்கல் வார்த்தைகளையும் தமிழில் மொழி பெயர்க்கும்பொழுது ஒவ்வொருவரும் ஒவ்வொரு வார்த்தையை உடயோகப்படுத்துகிறார்கள். இதனால் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களுக்கு மிக கஷ்டமாய் இருக்கிறது. ஆகவே இதை போக்குவதற்கு கன்ஸாலிடேட் செய்த பதங்களை எல்லோரும் உபயோகிக்கும் வகையில் ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த ஸைன்டிபிக் அண்ட் டெக்னிக்கல் வார்த்தைகளை பொறுத்தவரையில் என்னுடைய அபிப்பிராயம், பொதுவாக உலகத்தில் வழங்கக்கூடிய பதங்களையே வைத்திருப்பது நல்லது என்பது. அதன் மூலமாக தமிழ் விஞ்ஞானங்களை சுலபமாக அறிந்து கொள்ளமுடியும். அதன் மூலம் விஞ்ஞான புஸ்தகங்களை அறிந்துகொள்ள மாணவர்களை தயார் செய்துகொள்ள முடியும். ஆகையினால் தமிழில் இதற்கு என்று தனியாக பதங்களை ஏற்படுத்தாமல் எல்லா ஸைன்டிபிக் அண்ட் டெக்னிக்கல் டெர்ம்ஸ்களையும் சேர்த்து **international terminology** என்று சொல்லுவார்களே அந்த அடிப்படையில் ஏற்றுக்கொள்வது என்பதுதான் நல்லது என்று நான் அபிப்பிராயப் படுகிறேன்.

### *Pennar river water-supply*

* 448 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Villupuram and Cuddalore taluks of South Arcot district are affected by drought;

(*b*) whether the standing crops in these taluks have more or less withered away due to the non-supply of water from the Pennar river; and

(*c*) if so, whether the Government propose to give land revenue remission to the agriculturists of these two taluks?

28th March 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The standing crops in these taluks withered only in places where irrigation could not be supplemented by wells.

(c) The Collector has issued instructions to his staff to have a complete azmoish of both wet and dry lands in these taluks. The Collector himself will grant seasonal remission for wet crops wherever called for. He will approach Government through the Board of Revenue if special remission for dry crops is found necessary.

SRI A. GOVINDASAMY : இந்த கிணறு பாசனம் இல்லாத இடங்களில்தான் பாதிக்கப்பட்டது என்று சொன்னார்கள். பெண்ணையாறு பாசனத்தில் இருக்கக்கூடிய திருக்கோவிலூர் போன்ற இடங்களிலும் பயிர் பாதிக்கப்பட்டிருக்கிறது. அந்த இடங்களிலுள்ள விவசாயிகளுக்கு புல் ரெமிஷன் கொடுக்க சர்க்கார் உத்தரவு போடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் சொன்னது தண்ணீர் பாசனம் இல்லாத சில இடங்களில் கிணறு தண்ணீர் வசதியிருந்ததால் சாகுபடி செய்து சாவியில்லாமல் அறுத்துக்கொண்டார்கள். கிணறு இல்லாத இடங்களில இந்த ரெமிஷன் கொடுப்பதற்கு தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுவருகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, whether this non-supply of water in Pennar river has been a special feature this year only or whether it has been a regular feature in past years also? If that has been a regular feature what was the action taken by the Government then? Was any remission given before?

THE HON. SRI M. A. MANICKAVELU : During the current year there was low rainfall. That was why the tanks did not get filled up. (Laughter.)

SRI A. GOVINDASAMY : கிணற்று பாசனம் இருந்த இடங்களிலும் வாடகை கொடுத்து தண்ணீர் இறைக்க வேண்டியிருப்பதனால் அவர்கள் பயிரிட்டதில் பாதியை வாடகைக்காக கொடுக்கவேண்டியிருப்பதால் விவசாயிகள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அப்படியென்றால் அவர்களுக்கு எதாவது நன்மை செய்வதற்கு அரசாங்கம் கடமை பட்டிருக்கிறதல்லவா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் சொல்லுவது தண்ணீர் சுத்தமாக கிடைக்காமல் இநந்ததினால்தான் சாவியாகிவிட்டது. அதற்காக கிணற்றுத் தண்ணீரைக்கொண்டு சாகுடடி செய்தார்கள். மற்றபடி வாடகை கொடுத்து தண்ணீர் இறைத்தால் அதற்கு வேறு விதி இருக்கிறது. அந்த விதி பிரகாரம் வேறு நன்மைகளை செய்யலாம்.

### *Selection Board*

* 449 Q.—SRI S. LAZAR AND SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government propose to constitute a Common Selection Board to select candidates for admission to all the Engineering and Medical Colleges managed by both Government and private agencies?

THE HON. SRI C. SUBRAMANIAM : A proposal to set up a Common Selection Committee for the selection of candidates for